

# KING LEAR



## லீயர் மகாராஜன் கதை



ஐரோப்பா கண்டத்திலுள்ள பிறித்தன் தேசத்தில் லீயர் என்னும் மகாராஜன் ஒருவனிருந்தான். அவனுக்கு கானறில், றீகன், கோர்டீலியா என்று மூன்று குமாரத்திகள் உளர். அவர்களுள் கானறில் ஆல்பனி பிரபுவை விவாகஞ் செய்துகொண்டாள். றீகன் கார்ண்வால் பிரபுவுக்கு வாழ்க்கைப்பட்டாள். கடைசிப் பெண்ணாகிய கோர்டீலியாவின் பிரீதியைச் சம்பாதித்து அவளை விவாகஞ் செய்துகொள்ளப் பிரான்ஸ் அரசனும், பர்க்கண்டி பிரபுவும் லீயர் மகாராஜனுடைய சமஸ்தானத்தில் வந்திருந்தார்கள்.

அம்மகாராஜனுக்கு வயது எண்பதுக்குமேல் ஆய்விட்டது; ஆகையால் விருத்தாப்பியத்தினாலும் அரசுசெய்து பலவாறாய் அலைந்ததினாலும் இனிமேல் நமக்கு இராசகாரியங்களைப்பற்றி ஆவதென்ன? நம்மினும் இளமையும் இரத்த புஷ்டியும் உள்ளவர்களுக்கு இராச்சியத்தை ஒப்புவித்து மரணம் வந்து என்னைக் கொண்டுபோவதற்கு முன்னமே பரலோகத்திற்கு வேண்டியதைத் தேடிக்கொண்டு சித்தமாயிருப்போமென்று தீர்மானித்து, தன் பெண்களில் யாருக்குத் தன்னிடத்தில் விசேஷப் பிரீதி இருக்கிறதோ அதை அவர்கள் வாயினாலேயே அறிந்து தக்கபடி தன் இராச்சியத்தைப் பங்கிட்டுக் கொடுக்க அவர்களை அழைத்தான்.

அப்பொழுது மூத்தபெண்ணாகிய கானறில் தந்தையைப் பார்த்து, "உங்களிடத்தில் எனக்குள்ள பிரீதி இவ்வளவென்று வாயாற் சொல்லி முடியுமோ? நீங்கள் என் பிராணனைக் காட்டிலும் மேற்பட்டிருக்கின்றீர்கள்" என்று வாய்க்கு வந்த படி கற்பனையாய்ப் பிதற்றினாள். உண்மையாய்ப் பிரீதியில்லாதவர்களுக்கு இப்படி இச்சகம் பேசுவது கஷ்டமா? மகாராஜன் தன் மகள் வாயினாலேயே அவளுக்குள்ள பிரீதியைக் கேட்டு உதட்டினின்று வந்த வார்த்தையை உள்ளத்தினின்றே வந்ததென்று நினைத்து, அபிமானமாகிய பைத்தியம் மேற்கொண்டு தன் பெருத்த இராச்சியத்தின் மூன்றில் ஒருபங்கை அவளுக்குக் கொடுத்தான்.

பின்பு இரண்டாவது மகளைப் பார்த்து, "அம்மா றீகன், உன் கருத்தென்ன?" என்று கேட்க, அவளும் மூத்தவளைப் போல் மோசக்காரியாகையால் பேச்சில் அவளுக்குப் பின்னிடாமல் ஒருபங்கு அதிகமாகவே, "ஐயா, தேவரீரிடத்தில் எனக்கிருக்கும் அன்பைப் பார்த்தால் எங்கள் அக்காளுக்குள்ள பிரீதி ஏகதேசமாய்விடும். அன்றியும் மகாராஜனாயிருக்கும் என் தந்தையினிடத்தில் எனக்கு அதிகப் பிரீதியிருப்பதனால் மற்றெவ்வித சந்தோஷத்திலும் என் மனம் செல்லுகிறதில்லையே" என்றாள்.

இந்த இனிய வார்த்தைகளைக் கேட்டமாத்திரத்தில் இப்படிப்பட்ட பிரியமான குழந்தைகள் இருக்கையில் நம்மைவிடப் புண்ணியவான் எவன் இருக்கிறான் என்று நினைத்து, மூத்தவளாகிய கானறிலுக்குக் கொடுத்ததுபோலவே றீகனுக்கும் அவள் புருஷனுக்கும் மூன்றி லொருபங்கு கொடுத்தான்.

பின்பு தான் மிகுந்த பிரீதிவைத்திருந்த கடைசி மகளாகிய கோர்டீலியாவைப் பார்த்து, இவளை இவள் சகோதரிகளைக்காட்டிலும் வெகு செல்வமாய் வளர்த்ததனால் அவர்களைவிட இவளுக்கு நம்மிடத்தில் அதிக விசுவாசமிருக்கும்; ஆகையால் இவள் வெகு அன்போடு பேசி நம்மைச் சந்தோஷப்படுத்துவாள் என்று நினைத்து, "அம்மா, நீ என்ன சொல்லுகிறாய்?" என்றான். அதற்கு அவள், தன் சகோதரிகள் உதட்டில் ஒன்றும் உள்ளத்தில் ஒன்றுமாகப் பேசுகிறவர்களென்றும்,

மகாராஜன் பிழைத்திருக்கும்பொழுதே தாமும் தங்கணவரும் ஒன்றுசேர்ந்து அவன் தேசத்தைப் பிடுங்கிக்கொண்டு ஆளுகைசெய்ய இப்படி மோசமான வார்த்தைகளால் அவனை ஏமாற்றினார்கள் என்றும் நன்றாய் அறிந்து, அவர்கள் இச்சக வார்த்தையை வெறுத்து "ஐயா! தாங்கள் தந்தை; நான் மகள்; தங்களிடத்தில் கிரமமாய் எனக்கு எவ்வளவு பிரீதி இருக்கவேண்டியதோ அவ்வளவு இருக்கிறது" என்றாள்.

அரசன் இதைக்கேட்டுத் திடுக்கிட்டு, ஆ! நம்முடைய பிரியமான பெண் இப்படி நன்றியற்றவளைப்போல் பேசுகின்றாளே! இதென்ன காலவித்தியாசமென்று நினைத்து, "அம்மா! நன்றாய் யோசித்துப் பேசு; நீ சொன்னதைச் சொல்லவேண்டியபிரகாரம் சரியாய்ச் சொல்; இல்லாமற்போனால் உன் க்ஷேமத்திற்குக் குறைவுண்டாகும்" என்றான்.

கோர்டீலியா, "ஐயா! நீங்கள் என் பிதா, என்னைப் பெற்றெடுத்துப் பிரியமாய் வளர்த்தீர்கள். அதற்குப் பதிலாய் என் கடமை எவ்வளவோ அவ்வளவாய் நீங்கள் சொன்னபேச்சை அன்போடு கேட்டுக் கௌரவித்து வருகின்றேன். என் சகோதரிகளைப்போல் உங்களைவிட இவ்வுலகத்தில் பிரியமானது ஒன்றுமில்லை என்று கேட்டவர்கள் மலைக்கும்படி பேச என் னாவெழவில்லையே; நல்லது, என் சகோதரிகள் தந்தையைவிட மற்றெதினிடத்திலும் பிரீதியில்லையென்றார்களே; அப்படியானால், இவர்களுக்குக் கணவர்க ளேதுக்கு? என்னைப் பாணிக்கிரகணம் செய்யும் கணவன்மீது பக்தி சிரத்தையில் பாதியாவது வைக்கவேண்டாமா? தகப்பனிடத்தில் பிரீதியெல்லாம் வைத்து வீணுக்கு விவாகஞ்செய்துகொண்ட என் சகோதரிகளைப்போல நானும் செய்வேனா" என்றாள்.

தன் சகோதரிகள் தகப்பனிடத்தில் தங்களுக்கு எவ்வளவு பிரீதியிருக்கிறதாக மேலுக்குச் சொன்னார்களோ அவ்வளவு கோர்டீலியாவுக்கும் தன் தந்தையினிடத்தில் உண்மையாயிருந்தது. வேறொரு சமயத்தில் மகாராஜன் கேட்டிருந்தால் நன்றியற்ற வார்த்தைகளென்று தோன்றாமல் அன்புள்ள மகள் சொல்லவேண்டிய மாதிரியாகவே வெகு பிரியமாய்ப் பேசியிருப்பாள். ஆனால் தன் சகோதரிகளுடைய மோச

மான இச்சக வார்த்தைகளையும், அதற்கு மகாராஜன் முன் பின் யோசிக்காமல் தன் இராச்சியத்தை வெகுமதியாகக் கொடுத்ததையும் பார்த்து, இப்பொழுது நமக்குப் பிரீதியிருக் கிறதென்று சொல்லி சும்மாயிருத்தலே வெகு உத்தமமான காரியமென்று நினைத்தாள். இதனால் அவளுடைய பிரீதி இராச்சிய விலாபத்தைப் பற்றியதல்லவென்று சந்தேகமில்லா மல் தெரிந்துகொள்ளலாம். அன்றியும் அவள் வார்த்தையில் ஆடம்பரம் ஒன்றுமில்லாமையால் அவள் சகோதரிகள் எவ் வளவு மோசக்காரிகளோ, அவ்வளவு இவள் சத்தியவதி யென் றும் அறியலாம்.

மகாராஜன் சுபாவத்திலேயே வெகு கோபமும் அவசர மும் உள்ளவன். அப்படிப்பட்டவனுக்கு முதுமை வந்து உடம்பு மெலிந்து புத்தியும் தடுமாறிப்போனதனால், இது உண் மை, இது இச்சகவார்த்தை, இது தேனொழுகப்பேசும் பேச்சு, இது உள்ளத்தினின்று வரும் சொல் என்று அறியாமல், கோர்டீலியாவின் கபடமற்ற வார்த்தையைக் கர்வமான வார்த் தையென்றெண்ணி வெகு கோபங்கொண்டு அவளுக்குக் கொ டுக்கவைத்திருந்த இராச்சியத்தின் மூன்றுவது பாகத்தைத் தன் இரண்டு பெண்களுக்கும் அவர்களின் கணவராகிய ஆல் பனி, கார்ண்வால் பிரபுக்களுக்கும் சரியாய்ப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டான். அன்றியும், அந்த ஆல்பனி, கார்ண்வால் பிரபுக்களை அழைத்து மந்திரி பிரதானிகளின் சமுகத்தில் அரசர்களுக்குரிய மகுடம் சூட்டி, தன் அதிகாரம், வருமா னம், இராச்சியபாரம் முதலிய அரசனுக்குரிய அங்கங்களை யெல்லாம் கொடுத்துவிட்டு, மகாராஜனென்னும் பெயரைமாத் திரம் வைத்துக்கொண்டு போர்வீரரான பிரபுக்கள் நூறுபேர் பரிவாரமாய்ப் புடைசூழ்ந்துவர, ஒவ்வொரு மகள் அரமனை யில் ஒவ்வொரு மாதம் இருக்கப்போகிறதாய்ச் சொன்னான்.

இப்படிக் கொஞ்சமேனும் யோசிக்காமல் கோபவெறி யினால் தன் இராச்சியத்தை இரண்டு பெண்களுக்கும் தத் தஞ்செய்த விபரீதத்தைக் கண்டு மந்திரி பிரதானிகள் எல் லோரும் ஆச்சரியமடைந்து விசனப்பட்டார்கள். ஆனால் மந்திரியாகிய கேன்ற் பிரபு தவிர மற்றெவருக்கும், கோபித்

துக்கொண்டிருக்கும் அரசனேடு எதிர்த்துப் பேச தைரியமில்லாமற் போய்விட்டது. கேன்ற் பிரபுவும் கோர்டீலியாவுக்கு அனுகூலமாய்ப் பேச வாயெடுக்கையில் மகாராஜன் வெகு கோபங்கொண்டு அவனைப்பார்த்து: "நீ வாயை மூடு; இனிப் பேசுவாயாகில் உன் தலை போய்விடும்" என்ருன். உத்தமனுகிய கேன்ற் பிரபு இப்படிப்பட்ட வீண் மிரட்டுக்கெல்லாம் பயப்படுகிறவனல்ல. மகாராஜனிடத்தில் அரசனுக்குரிய கவுரவத்தையும் தந்தைக்குரிய அன்பையும், எஜமானுக்குரிய நம்பிக்கையையுமுள்ளவனுய் எப்பொழுதும் அண்டையிலேயே இருந்தவன். அன்றியும், தன் எஜமானனுகிய மகாராஜனுடைய சத்துருக்களோடு எதிர்த்துச் சண்டை செய்யவே தான் பிழைத்திருக்கிறதாக எண்ணி அவனைக் காப்பாற்றும்பொருட்டுத் தன் உயிரைக் கொடுக்க முன்பின் பாராத தீரன். ஆகையால், மகாராஜன் இப்பொழுது தனக்குத்தானே சத்துருவாய்விட்டதைக் கண்டு, அவனுக்கு க்ஷேமமுண்டாகும்படி முறைதவருமல் அவனையே எதிர்த்துப் பேசத் தொடங்கினன். மேலும், அந்த கேன்ற் பிரபு அரசனுக்கு அதுவரையில் நம்பிக்கையுடன் ஆலோசனை சொல்லிக்கொண்டுவந்த மந்திரியாகையால் இப்பொழுதும் அவரைப்பார்த்து: "மகாராஜனே, இதுவரையில் அநேக பெருத்தவிஷயங்களில் என் அபிப்பிராயப்படி செய்திருக்கின்றீர்கள். இப்பொழுது தாங்கள் செய்திருக்கும் காரியம் என் புத்திக்கு விரோதமாய்ப்படுகிறது. அதைத் தாங்களும் அப்படியே எண்ணி நான் சொல்லும் யோசனைப்பிரகாரம் செய்யக் கோருகிறேன். தங்களுடைய கடைசி மகளுக்கிருக்கும் பிரீதி அற்பமல்லவென்று உறுதியாய் நம்புங்கள். இது பொய்யாகிறபட்சத்தில் என் பிராணனைக் கொடுத்துவிடுகிறேன். மனதில் சற்றுங் கபடமில்லாமல் மெதுவாய்ப் பேசுகிறவர்களுக்கு நம்மிடத்தில் அன்பில்லையென்று நினைக்கலாமா? பலவான்கள் இச்சக வார்த்தைகளைக் கேட்டு மயங்கிப்போகிருர்கள். மானிகள் கபடமற்ற வார்த்தையிலே சந்தோஷமுள்ளவர்களாயிருக்கிருர்கள்.

ஆகையால், இவைகளையெல்லாம் செவ்வையாய் யோசித்து, இப்பொழுது தாங்கள் செய்த விபரீத காரியத்தை

மாற்றவேண்டியது. தங்கள் விஷயத்தில் பிராணனைக் கொடுக்கச் சித்தமாயிருக்கும் என்னைப் பயப்படுத்துவதனால் பிரயோசனமென்ன? இப்பொழுது நான் தருமமாய்ப் பேசவேண்டியபடி பேசாமல் விடுவேனு" என்றான். இப்படி உத்தமனுகிய கேன்ற் பிரபுவினுடைய கபடமற்ற வார்த்தையைக் கேட்கையில், மகாராஜனுக்குக் கோபம் அதிகரித்து, வைத்தியனைக் கொன்று தன்னைக் கொல்லவந்த நோயைப் பிரியமாய்க் காப்பாற்றும் வெறிபிடித்த நோயாளியைப்போல் நம்பிக்கையுள்ள மந்திரியாகிய கேன்ற் பிரபுவைப் பார்த்து: "அடா நீ இத்தேசத்தைவிட்டு ஓடிப்போகவேண்டியது. உனக்கின்னும் ஐந்துநாள் கெடு கொடுத்திருக்கின்றேன்; இதற்குள் உன் பிரயாணத்துக்கு வேண்டியதையெல்லாம் சித்தப்படுத்திக்கொள்; ஆறுவதுநாள் இந்த ஊரில் தலை காட்டுவாயாகில் உடனே உன் உயிர் போய்விடும்" என்றான். அதற்கு கேன்ற் பிரபு மகாராஜனைப் பார்த்து: "ஐயா! இதோ போகிறேன்; நீங்கள் இப்படிப் பேசத் தலைப்பட்டபின்பு இங்கிருக்கிறது இத்தேசத்தைவிட்டுப் போனதுபோலல்லவா? நான் எப்படிப்போனுலும் போகிறேன்; வெகு சரியான எண்ணத்தோடும் விவேகத்தோடும் பேசிய பெண்ணுகிய கோர்டீலியாவைத் தெய்வமே காப்பாற்றவேண்டியது. அவளுடைய சகோதரிகள் சொல்லிய விஸ்தார வார்த்தைகளுக்குத் தகுந்தபடி மகாராஜனிடத்தில் பிரீதியுள்ளவர்களாயிருந்தால் அதுவே போதும். எனக்கென்ன, இதுவரைக்கும் இந்தத் தேசத்தில் எப்படி ஜீவனஞ்செய்துவந்தேனே அப்படியே வேறொரு தேசத்திலும் ஜீவனஞ்செய்யப் போகிறேன்" என்று சொல்லி அவ்விடத்தை விட்டுப் போனுன்.

பிறகு பிரான்ஸ் அரசனையும் பர்க்கண்டி பிரபுவையும் அழைத்துவந்து, அவர்களைப்பார்த்து: "கேளுங்கள், மகாராஜனுக்குக் கடைசி மகளிடத்தில் இருந்த பிரீதி போய்விட்டது. அவளை விவாகம் பண்ணிக்கொள்ளும்பட்சத்தில் அவள் தேகந்தவிர வேறோர் ஆஸ்தியும் இல்லை. ஆகையால் இதுவரையில் அவளை விவாகஞ் செய்துகொள்ளவேண்டுமென்றிருந்த எண்ணத்தை இன்னும் வைத்துக்கொண்டிருக்கிறீர்களோ" என்று சொன்னதின்பேரில், பர்க்கண்டி பிரபு: "அப்

படியானுல் நான் அவளை விவாகம் பண்ணிக்கொள்ளுகிற தில்லை" என்றுன். பிரான்ஸ் அரசனே, "நல்லது, இந்த கோர்டீலியா அடக்கமாய்ப் பேசுங் குணமுடையவள். அன்றியும் தன் சகோதரிகளைப்போல் இச்சகம்பேசத் தெரியாதவள். இந்தத் தப்பினுல் அல்லவோ தன் தகப்பனுடைய பிரீதியை இழந்தா" ளென்று நன்றுய்த் தனக்குள் நிச்சயித்து, அவள் கையைப் பிடித்துக்கொண்டு: "பெண்ணே, கோர்டீலியா! உன் குணுதிசயங்களே ஒரு இராச்சியத்தைக்காட்டிலும் மேலான சீதனமாய் இருக்கின்றன. உன் தந்தைக்கு உன்னிடத்தில் பிரீதியில்லாமற்போனுலும் அவரிடத்திலும் உன் சகோதரிகளிடத்திலும் செலவுபெற்றுக்கொண்டு என்னேடு வந்து அழகிய பிரான்ஸ் நாட்டிற்கு மகாராணியாய் உன் சகோதரிகளுக்குள்ள இராச்சியங்களைக்காட்டிலும் மேலான இராச்சியங்களை ஆளலாம்" என்று சொல்லி, பர்க்கண்டி பிரபுவைப் பார்த்து: "ஓய்! உம்முடைய வார்த்தை நீர்மேல் எழுத்தைப்போல் நிலையற்றது. இத்தனைநாள் இப்பெண்ணினிடத்து உமக்கிருந்த பிரீதியெல்லாம் தண்ணீராய் ஒரு நிமிஷத்திற் கரைந்துபோய் விட்டதல்லவா" என்று பரிகாசமாய்ப் பேசினுன்.

அப்பொழுது கோர்டீலியா கண்ணீர்விட்டு அழுது, தன் சகோதரிகளைப் பார்த்து, "அம்மைமாரே, நான் போய் வருகிறேன். நீங்கள் சொன்னசொல் தவருமல் நம்முடைய தகப்பனுரிடத்தில் பிரீதியுடன் இருக்க வேண்டுகிறேன்" என்று சொன்னுள். அதற்கு அவர்கள் முகங்கடுத்து: "நீ எங்களுக்குப் புத்தி சொல்லவேண்டாம். நாங்கள் என்ன செய்யவேண்டுமோ அது எங்களுக்குத் தெரியும். ஆனுல், உன்னைக் கடவுள் கொடுத்த பிச்சையாக எண்ணி விவாகஞ்செய்துகொண்ட கணவனுக்குமாத்திரம் சந்தோஷம் உண்டாகும்படி நடந்துகொண்டால் அதுவே போதும்" என்று பரிகாசமாய்ச் சொன்னுர்கள். கோர்டீலியா தன் சகோதரிகளுடைய கபடத்தை நன்றுய் அறிந்தவளாகையால் அவர்கள் வசத்தில் தன் தந்தையை விட்டுப் போவதில் சற்றும் சம்மதியில்லாமல், ஐயோ! இந்த மோசக்காரிகளிடத்தில் மகாராஜனை ஒப்பு

விக்கும்படி நேரிட்டதேயென்று விசனப்பட்டுக்கொண்டே போனுள்.

கோர்டீலியா போனவுடனே அவள் சகோதரிகள் தங்கள் சுபாவத்திற்குரிய ராட்சஸகுணத்தை நன்ருய் வெளியிடத் தொடங்கினர்கள். மோசக்காரருடைய பேச்சுக்கும் நடத்தைக்கும் வெகு வித்தியாசமுண்டல்லவா? — ஒவ்வொரு மாதம் ஒவ்வொரு மகளிடத்தில் இருப்பதாக மகாராஜன் செய்த ஏற்பாட்டின்படி முதல் மாதம் மூத்தமகளாகிய கான றில் வீட்டில் இருக்கையில், அவள் ஆதியில் சொன்ன வார்த்தைக்கு விரோதமாய் நடக்கத் தலைப்பட்டதை மகாராஜன் தெரிந்துகொண்டான். இந்தப் படுபாவியாகிய கானறில் தன் தகப்பன் போட்டுக்கொண்டிருந்த கிரீடத்தைக்கூட வைக்காமல் எல்லாவற்றையும் பிடுங்கிக்கொண்டாள். அப்படியிருந்தும், அக்கிழவன் தான் இன்னும் அந்நாட்டுக்கு அதிபதியென்றெண்ணி வைத்துக்கொண்டிருந்த அரசர்க்குரிய சில அங்கங்களைப் பார்க்கையில் அவளுக்கு மனம் பொறுக்கவில்லை. அதிலும் முக்கியமாய் அவ்வரசனுக்குப் பரிவாரமாயிருந்த நூறு பிரபுக்களைப் பார்க்க அவளுக்கு வெகு சங்கடம் உண்டாய்விட்டது. தன் தகப்பனைப் பார்க்கும் பொழுதெல்லாம் முகஞ் சுளித்துக்கொள்வாள். கிழவன் அவளோடு பேசவேண்டுமென்ருல் தனக்கு உடம்பு சௌக்கியமில்லை யென்ருவது, அல்லது அவனைப் பாராமலிருக்கும்படியான வேறெந்தக் காரணங்களையாவது சொல்லுவாள். இதனுல் அக்கிழவனைப் பெருத்த சல்லியமாயும், அவர் பரிவாரங்களை வீண்செலவுக்குக் காரணமாயும் அவள் நினைத்திருந்தது வெளிப்பட்டது. அவளே இப்படி மரியாதை தப்பி நடப்பதைப் பார்த்தும், அவள் இரகசியமாய்ச் சொல்லும் வார்த்தைகளைக் கேட்டும் அவள் வேலைக்காரர்கள் கூட அவனை அலட்சியம் செய்து அவன் சொன்ன வேலையைச் செய்யாமலும், சிலவேளை அவன் சொன்னதைக் கேளாதவர்போல் அவமதித்தும் வந்தார்கள். தம்முடைய தப்புக்களினுலும் பிடிவாதத்தினுலும் தாமே வருவித்துக்கொள்ளும் சங்கடங்களை அறியாதவர்போல் வெகுகாலம் பொறுத்துக்கொண்டிருப்பது மனிதற்கு இயல்பாகையால் தன் மக

ளுடைய நடத்தை மாறிப்போயிருந்தும் அதைப் பாராதவன் போல் மகாராஜன் தன்னால் கூடியவனாயிற் பொறுத்துக் கொண்டுவந்தான்.

உண்மையான பக்தியும் சிரத்தையும் உள்ளவர்களுக்கு எவ்வளவு தீங்குசெய்தாலும் அவர் பிரியார். பொய்யும் கபடமும் உள்ளவர்களுக்கு எவ்வளவு நன்மை செய்தாலும் அவர் இணங்கி நடவார். அப்படியே உத்தமனாகிய கேன்ற் பிரபு அரசன் தன்னை ஊரைவிட்டுத் துரத்தித் தன் தேசத்தில் அகப்பட்டால் கொல்வதாகச் சொல்லியிருந்தும் தன்னால் எஜமானனாகிய மகாராஜனுக்கு எப்பொழுதாவது சகாயமுண்டாகலாமென்று நினைத்து, வந்தது வரட்டுமென்று ஊரைவிட்டுப் போகாமலிருந்தான். விசேஷப் பிரயோஜனத்தைச் செய்பவர்களுக்குச் சகாயமாக எவ்வளவு இழிவான காரியத்தைச் செய்தபோதிலும் அதிற் குறைவில்லை. ஆகையால் அன்புள்ள எஜமானனிடத்தில் உண்மையான பிரீதியுள்ளவர்கள் மாறுவேடம் தரித்தாவது செய்யத்தகாத காரியங்களையெல்லாம் செய்கிறார்களென்று நினைத்து, உத்தமனாகிய கேன்ற் பிரபு தன் பெருமையையும் வேஷத்தையும் மறைத்து, வேலைக்காரன் வேஷம்பூண்டு, மகாராஜனிடத்துக்கு வந்து: "சுவாமீ! என் பேர் காயஸ். என்னை வேலைக்கு வைத்துக்கொள்ளுவீரா" என்று வெளியாயும் குறுக்கடியாயும் கேட்டான். இதை அரசன் கேட்டு, இவனுக்குக் கபடம் குச்சிதமொன்றும் தெரியாது. ஆகையாற்றான் இவன் இப்படிப் பேசுகிறான். நமக்கும் கபடமுள்ள வார்த்தைகளைக் கேட்டுக் காது புளித்துப்போயிருக்கிறது. தூரத்திற் போவானேன்? நம்முடைய மூத்தமகளிடத்திலேயே பார்த்துவிட்டோம். ஆகையால் இவனை வைத்துக்கொண்டால் நல்லதென்று நினைத்துச் சம்பளத்தை ஏற்படுத்தித் தனக்கு மிகவும் வேண்டியவனாயும் பல பராக்கிரமசாலியாயும் இருந்த கேன்ற் பிரபு இவன் என்று சற்றுந் தெரிந்துகொள்ளாமலே வேலைக்கு அமர்த்திக்கொண்டான்.

இப்படி காயஸ் வேலைக்கு அமர்ந்தவுடனே எஜமானனிடத்தில் தனக்குள்ள பிரீதியை வெளிப்படுத்தச் சமயம்

வாய்த்தது. அதாவது, தான் வேலைக்கு அமர்ந்த நாளிலே கானறிலுடைய உக்கிராணக்காரன் அவள் இரகசியமாய்ச் செய்த துர்ப்போதனையினால் மகாராஜனுக்கு எதிரில் உறுத்திப்பார்த்தும் தலைகொழுத்த பேச்சுக்களைப் பேசியும் வெகு அலட்சியமாய் நடந்ததினால் எஜமானனுக்கு நேரிட்ட அவமானத்தைக் கண்டு பொறுக்காமல், கேன்ற் பிரபு அம்மரியாதையற்ற மூடப்பயலை முன்பின் பாராமல் நாயைப்போல் காலைவாரி அடித்து தலைமறைவாகத் திரியும்படி செய்தான். இந்தச் சகாயத்தைப் பார்க்கையில் மகாராஜனுக்குத் தன் வேலைக்காரனிடத்தில் விசேஷ பிரீதி உண்டாய்விட்டது.

அன்றியும் அக்காலத்தில் மகாராஜாக்கள் பிரபுக்கள் இவர்களுடைய அரமனைகளில் லௌகிக வேலைகள் முடிந்த பின்பு வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டிருக்க அகசியக்காரர்களை வைத்துக்கொண்டிருப்பது வழக்கம். அப்படியே மகாராஜனுக்கும் பிரத்தியேகமாய் அரமனையிலிருந்தபோது ஓர் அகசியக்காரன் இருந்தான். அவன் மிகவும் அற்ப உத்தியோகஸ்தனா யிருந்தபோதிலும், தன் நிலைமைக்குத் தக்கபடி மகாராஜனிடத்தில் பிரீதிவைத்து இராச்சியம் போய்விட்டபோதிலும் அவனை விடாமல் கேன்ற் பிரபுவைப்போலவே அவனோடுகூட இருந்து, தன் சாதுரியமான வார்த்தைகளினால் அவனுக்குச் சந்தோஷம் உண்டுபண்ணுவான். சிலவேளை மகாராஜனே! நீர் கிரீடத்தைக் கழற்றி உம்மிடத்தில் இருந்ததையெல்லாம் பெண்களுக்குக் கொடுத்துவிட்டீரே. இப்படி யோசனையில்லாத காரியத்தைச் செய்யலாமாவென்று பரிகாசமாய்ச் சொல்லி,

> மகிபதி மூடர்வார்த்தை மதிப்புட னெண்ணிமுற்றும்
> தகுதியா மரசையெல்லாந் தந்தனன் மக்கட்கென்றே
> வெகுநய ருற்றேயாமும் வெருண்டனம் அவரோவென்னில்
> அகமகிழ் வெய்தித்தந்தை யருந்துயர்க் கிரங்காரந்தோ!

என்று உருக்கமாய்ப் பாடுவான். இப்படி கானறில் என்பவளின் முன்னே கூட இவ்வகசியக்காரன் கபடமின்றித் தன் மனதிலிருப்பதை ஒன்றும் ஒளியாமல் அவள் புத்தியில் நன்றாய் உறைக்கும்படி பரிகாசமாயும் சகிக்கக்கூடாததாயும் உள்ள பல வார்த்தைகளைப் பேசி தன் வாய்க்கு

வந்தபடி பழமொழிகளையும் சொல்லிப் பாட்டுக்களையும் பாடுவான். இப்படிப் பரிகாசமாய்ப் பேசும்பொழுது அரசனைக் குறித்து ஆ! வேலிச் சிட்டென்று ஒரு குருவி இருக்கிறதல்லவா, அது குயிலின் முட்டைகளைக் குஞ்சுபொரித்து இறகு முளைத்தோடிப் போகிறவரையிலும் வளர்க்கின்றது. அந்தக் குஞ்சுகள் பறந்தோடும்பொழுது வேலிச் சிட்டு பட்ட வருத்தத்திற்கு மாருக அதன் கழுத்தைக் கடித்துக் கொன்று விட்டு ஓடுகின்றனவல்லவா? இந்த மகாராஜன் தலையெழுத்தும் இப்படித்தானிருக்கிறது. இவருக்கு இராச்சியமிருக்கிறவரையில் எல்லோரும் சொன்னபடி கேட்டுக் குதிரையின்பின் போகிற வண்டியைப்போல் இருந்தார்கள். இப்பொழுதோ குதிரைக்குமுன் வண்டி போவதைப்போல் இருக்கிறது. இது பார்க்கிற கழுதைகளுக்கெல்லாம் பரிகாசந்தானே. இப்பொழுது மகாராஜன் எங்கேயிருக்கிருர். அவருடைய பெயர்மாத்திரம் இருக்கிறதென்று ஒளிக்காமல் தனக்குத் தோன்றியபடியெல்லாம் அடிக்கடிச் சொல்லுவான். இதைக் கேட்டு, நீ இனிமேல் இப்படிப் பேசினுல் உன்னைச் சவுக்காலடித்துத் துரத்திவிடுவோமென்று இரண்டொரு தடவை பயமுறுத்திக் கானறிலும் அவளைச் சேர்ந்தவர்களும் சொன்னுர்கள்.

தன்மீது யோசனையில்லாமல் பிரீதிவைத்த தந்தையினிடத்தில் கொஞ்சமேனும் விசுவாசமின்றி நாளுக்குநாள் மரியாதை குறைந்து அவன் அறியும்படியே பகிரங்கமாய் அவனை அலட்சியம் செய்துவந்த கானறில் அவனைப் பார்த்து: "ஐயா! உமக்கு நூறு பிரபுக்களே பரிவாரமாயிருக்க வேண்டும் என்பீராகில், நீர் என் அரமனையில் இருக்கச் சரிப்படாது. இத்தனைபேர் உமக்கேதுக்கு? அவர்களால் வீண்செலவேயன்றிப் பிரயோசனம் ஒன்றுமில்லை; அன்றியும் என் வீட்டில் எப்பொழுது பார்த்தாலும் சந்தடியும் விருந்துமாயிருக்கிறது. ஆகையால் அவர்களையெல்லாம் தள்ளிவிட்டு உமக்குத் தகுந்தவர்களாயும், உம்மைப்போலவே வயது சென்றவர்களாயும் இருப்பவர்களைமாத்திரம் வைத்துக்கொள்ளும்படி விரும்புகிறேன் என்று அச்சமில்லாமற் சொன்னுள்.

இதைக்கேட்டு மகாராஜன் திடுக்கிட்டு, ஆ! இவள் பேசுவது உண்மையா, அல்லது இப்படிப் பிரியமற்றுப் பேசுகிறவள் நம்முடைய மகளா? நாம் இராச்சியத்தைக் கொடுத்து மகுடஞ் சூட்டியிருக்க, நம்முடைய வயதிற்கும் நிலைமைக்கும் உரிய கௌரவத்தைப் பொறுக்காமல் நம்முடைய பரிவாரத்தைக் குறைக்கவேண்டுமென்று சொல்வாளாவென்று வெகு ஆச்சரியப்பட்டான். அப்படியிருந்தும் அவள் கூடாது, நீர் நான் சொன்னபடி செய்யவேண்டியதென்று பிடிவாதமாய்ச் சற்றும் மரியாதையற்றுப் பேசினதால், கிழவனுகிய மகாராஜனுக்குக் கோபம் மேலிட்டு, அடி பாதகி! நீ ஒரு கெட்டுப்போன கழுகு. என் பரிவாரத்திலுள்ள பிரபுக்கள் எப்பொழுது பார்த்தாலும் சந்தடி செய்கிருர்களென்று சொன்னையே, அது சுத்தப் பொய்யென்று கடுகடுத்துச் சொன்னுன். அவன் சொன்னபடியே அவன் பரிவாரத்திலுள்ள பிரபுக்கள் மேன்மையான குணமும் நல்லொழுக்கமும் உடையவர்கள். யார்யாருக்கு எப்படி நடக்கவேண்டுமோ அதை நன்ருய் அறிந்தவர்கள். கானறில் சொன்னபடி சந்தடி செய்வதிலும் விருந்திலும் பிரியமில்லாதவர்கள். ஆகையால், அவள் சொன்னது அவதூருன வார்த்தையேயன்றி உண்மையல்ல. உடனே மகாராஜன் தன் பரிவாரத்தைப் பார்த்து, நம்முடைய குதிரைகளைக் கொண்டுவாருங்கள்; நமது இரண்டாவது மகளாகிய ரீகன் வீட்டுக்கு நாம் எல்லோரும் போவோமென்று உத்தாவுசெய்து, ஆ! நன்றியற்றவர்கள் கன்னெஞ்சுடைய ராட்சதர்கள்; அதிலும் பிள்ளைகள் தாய்தந்தையிடத்தில் இப்படி இருப்பார்களாகில் அவர்கள் சமுத்திரத்திலுள்ள கோரமான ஜந்துக்களைக்காட்டிலும் பார்க்கப் பயங்கரமாயிருக்கிருர்கள் என்று சொல்லி தன் மூத்தமகளாகிய கானறிலைப் பார்த்து, "உனக்குப் பிள்ளையில்லாமல் போகவேண்டியது. அன்றி இருந்தால் நீ என்னை அவமதித்தது போல் உன்னை அவமதிக்கும்வரைக்கும் நீ பிழைத்திருந்து நன்றியற்ற மக்களுடைய நடத்தை சர்ப்பத்தின் விஷப்பல்லைப்பார்க்கிலும் கொடியதென்று புத்தியிற்படும்படி அக்குழந்தை நடத்திக்காட்டுவதை நீ அறியவேண்டியது" என்று கேட்டவர்கள் நடுங்கும்படி அதிகோரமான சாபங்கொடுத்

தான். அப்பொழுது கானறிலின் கணவனுகிய ஆல்பனிப் பிரபு அரசனைப் பார்த்து, மகாராஜனே! நானும் உங்களுடைய மகளோடு சேர்ந்து உங்களுக்குத் துரோகஞ்செய்ததாய் நினைக்கவேண்டாமென்று உபசார வார்த்தை சொல்லத் தொடங்குகையில், மகாராஜன் காதுகொடுத்துக் கேளாமல் வெகு கோபங்கொண்டு குதிரைகளுக்கு ஜீனி போடுவித்து இரண்டாவது மகளாகிய றீகன் வீட்டைக்குறித்துப் பரிவாரத்துடன் போனன். அன்றியும் மகாராஜன்: ஐயோ! நம்முடைய மூன்ருவது மகளாகிய கோர்டீலியா சொன்னதைத் தப்பாக நினைத்தோமே; அது தப்பாகுமா? அவள் சகோதரிகளுடைய நடத்தையைப் பார்க்கையில் கோர்டீலியாவைப்போல் உத்தமி யில்லையென்று தோன்றுகிறதே யென்று துக்கித்து, மறுபடியும் நாமோ ஆண்பிள்ளை; அப்படியிருந்தும் நம்மை இந்த அற்ப ஜந்துவாகிய கானறில் இப்படித் துக்கப்பட்டு அலையும்படி மோசஞ்செய்தாள் அல்லவா? என்று வெட்கி விசனப்பட்டான்.

மகாராஜன் புறப்பட்டுப் போனகாலத்தில் றீகன் அரமனையில் கணவனேடு வெகு ஆடம்பரத்துடன் கொலுவீற்றிருந்தாள்; அப்பொழுது மகாராஜன் தான் பரிவாரத்துடன் வந்து சேருவதற்கு முன்னமே தயாராயிருக்கும்பொருட்டுக் காயஸ் என்னும் வேலைக்காரனிடத்தில் கடிதமெழுதி அனுப்பினன். இப்படிச் செய்வதற்கு முன்னமே தன் தந்தை மனம் போனவழியெல்லாம் நடக்கிருனென்றும், அடிக்கடி கோபித்துக்கொள்ளுகிருனென்றும், அவனுடைய பெரிய பரிவாரத்தை வீட்டுக்குள் சேர்க்கவேண்டாமென்றும் கானறில் றீகனுக்குக் கடிதமூலமாய்ச் சங்கதி தெரியப்படுத்தினள். இந்தச் சமாசாரங் கொண்டுவந்தவனும் காயஸ் என்பவனும் ஒன்ருய் வந்து சேர்ந்தார்கள். அந்த மனிதனைக் காயஸ் பார்த்து: இவன் முன் மரியாதையின்றி நடந்ததற்காக நாம் காலைவாரி அடித்த உக்கிராணக்காரனல்லவா? இவன் இப்பொழுது நம்மை அலட்சியமாய்ப் பார்க்கிருன்; ஆகையால், இவன் ஏதோ கெடுதிக்காக வந்திருக்கிருனென்று சந்தேகித்துத் திட்டி, "வாடா ஒருகை பார்ப்போம்" என்ருன். அதற்கவன் பின்னிடைந்ததனுல் காயஸுக்குத் தன்னை மீறிக் கோபமுண்டாகி

அவனைக் கைசலிக்க அடித்தான். கெட்ட சமாசாரம் கொண்டுவந்தவனும், எப்பொழுதும் மித்திரபேதம் செய்பவனுமிருந்த அக்கொடியவனை இப்படி அடித்தது அவனுக்குத் தகுந்த தண்டனைதான். இதை றீகனும் அவள் கணவனும் கேட்டு தகப்பனையும் மகாராஜனையு மிருந்தவருடைய தூதனென்று விசேஷமாய் மரியாதை செய்வதை விட்டுக் காயஸைத் தொழுவி லடிக்கும்படி உத்தரவு செய்தார்கள்; ஆகையால் மகாராஜன் தன்னுடைய அன்புள்ள வேலைக்காரனாகிய காயஸ் வெகு அவமானத்துடன் தொழுவடிக்கப்பட்டிருப்பதைக் கோட்டைக்குள் பிரவேசிக்கும்பொழுது முதலிற் பார்த்தான்.

இப்படிக் கேன்ற் பிரபுவைத் தொழுவிலடித்ததைப் பார்க்கையில் அரசனை நேராய் வந்தால் என்ன மரியாதை நடக்குமோ அது முன்னதாகவே வெளிப்பட்டது. அப்படியே மகாராஜன் வந்து தன் மகளும் அவள் புருஷனும் எங்கே என்று கேட்கையில், இராத்திரியெல்லாம் பிரயாணஞ்செய்தலைந்ததினால் அரசனைப் பார்க்கச் சரிப்படாதென்றார்கள். அதற்கவன் வெகு கோபங்கொண்டு, கூடாது; நான் அவர்களை அவசியம் பார்க்கவேண்டுமென்று உறுத்திச் சொன்னதின்பேரில் வெளியில் வந்து பார்த்தார்கள். அப்பொழுது தன் கதையை முன்னமே தெரியப்படுத்தித் தன் சகோதரிக்கும் மகாராஜனிடத்தில் பிரியமில்லாம லிருக்கும்படி மனதைக் கலைக்கவந்த படுபாவியான கானறிலும் அவர்களோடு வெளியே வந்தாள்.

இதைப் பார்த்தவுடனே மகாராஜனுக்கு மிகவும் மனம் நொந்துபோய்விட்டது. அன்றியும் றீகன் தோழியைப்போல் தன் சகோதரியின் கையைப் பிடித்துக்கொண்டதைக் கண்டு மகாராஜன் மேன்மேலும் துயரமுற்று, கானறிலைப் பார்த்து, "ஐயோ! நானோ வயதுசென்ற கிழவன்; என்னுடைய தலையோ மிகவும் நரைத்திருக்கின்றது. அதைப்பார்த்தும் இப்படிச் செய்யக் கொஞ்சமாவது உனக்கு வெட்கமில்லையா" என்றான். றீகன் அவனைப் பார்த்து: "ஐயா! நீர் கானறிலோடு போய் அவள் வீட்டில் சந்தடிசெய்யாமல் காலத்தைக் கழியும். உம்முடைய பரிவாரத்திற் பாதியைத் தள்ளிவிடும். உம்மை

மன்னிக்கும்படி கானறிலேக் கேட்டுக்கொள்ளும். உமக்கோ வயது சென்றதினுல் மனந்தடுமாறுகிறது. ஆகையால் உம்மைவிட ஸ்திரமான புத்தி உள்ளவர்கள் உம்மைக்கொண்டு திருப்பவேண்டியதாய் இருக்கிறது'' என்றுள். அதற்கு மகாராஜன், ''ஆ, இதென்ன விபரீதகாலம்! என் மகளுடைய காலில் விழுந்து நான் அன்னவஸ்திரத்திற்கு யாசகஞ்செய்கிறதா? இப்படி முறைகெட்டு அவள் சோற்றுக்குக் காத்துக்கொண்டு இருப்பதைப்பார்க்கிலும் அவள் வீட்டுக்குப் போகாமல் உன்னிடத்திலேயே என் பரிவாரத்தோடிருப்பது நலம். உனக்கு நான் பாதி இராச்சியங் கொடுத்தது ஞாபகமில்லாமற்போமா? உன் முகமோ கானறில் முகத்தைப்போல் கடுமையில்லாமல் குளிர்ந்திருக்கின்றது. இது சரிப்படாத பட்சத்தில், பாதிப் பரிவாரத்தைத் தள்ளிக் கானறில் வீட்டுக்குப் போவதைக்காட்டிலும் பிரான்ஸ்தேசத்திற்குப் போய்ச் சீதன மொன்றுமில்லாமல் என் கடைசி மகளை விவாகஞ்செய்துகொண்ட மகாராஜனிடத்தில் ஏதோ கொஞ்சம் ஜீவனும்சம் பெற்றுக்கொண்டு என் காலத்தைக் கழித்துவிடுகிறேன்'' என்றுன்.

இப்படி மகாராஜன் கானறிலேக்காட்டிலும் றீகன் தன்னிடத்தில் பட்சம் வைத்து நடத்துவாள் என்று நினைத்தது வீணுய்விட்டது. ஏனென்றுல் தந்தைக்குக் கெடுதி செய்வதில் கானறிலேக்காட்டிலும் தனக்கு விசேஷ சந்தோஷமுண்டென்பதை வெளியிட்டதுபோல் றீகன் மகாராஜனைப் பார்த்து, ''ஐயா! உம்முடைய பரிவாரத்திற்கு ஐம்பது பிரபுக்கள்தான் ஏதுக்கு? இருபத்தைந்துபேர் போது'' மென்றுள். இதைக் கேட்டு மகாராஜனுடைய நெஞ்சம் பிளந்துபோவதாயிருந்தது. மகாராஜன் கானறிலேப் பார்த்து, ''அம்மா! அந்தமட்டும் நீ நல்லவள்தான். நீ ஐம்பதுபேரை வைத்துக்கொள்ளலாமென்று சொன்னுய்; ஈரிருபத்தைந்து ஐம்பது ஆகையால் உன் பிரீதி றீகன் பிரீதிக்கு இரண்டுபங்காயிருக்கிற'' தென்றுன். அதற்குக் கானறில் நல்லது இருக்கட்டும்; உமக்கு இருபத்தைந்துபேர்தான் ஏன்? அல்லது பத்துப்பேர்தான் ஏதுக்கு? அன்றியும் ஐந்துதான் ஏன்? என்னுடைய வேலைக்காரர்களாவது என் சகோதரியின் வேலைக்

காரர்களாவது உம்முடைய காரியங்களை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டு போகமாட்டார்களா என்றாள். இப்படி அவ்விரண்டு கொடிய பெண்களும் தங்களிடத்து வெகு விசுவாசத்தை வைத்து நடத்திய வயதுசென்ற தகப்பன் விஷயத்தில் ஒருவரோடொருவர் பந்தயம் போட்டுக்கொண்டு கெடுதிசெய்யத் தலைப்பட்டாற்போல் அவனுடைய பரிவாரத்தையெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாய்க் குறைத்துப் பெரிய இராச்சியத்தை ஆண்டுவந்தவனுக்குப் போதாததாயிருந்த அற்ப கவுரவத்தையும் போக்கினார்கள். இந்தப் பெரிய பரிவாரத்தினாற்றானா அவனுக்கு உண்மையான சுகம் உண்டாகும்? ஆனால், மகாராஜனாயிருந்து பிச்சைக்காரனாய்விடுகிறதும், கோடானுகோடி ஜனங்களுக்கு எஜமானனாயிருந்து வேலைக்கார னொருவனும் இல்லாமலிருப்பதும் பொறுக்கக்கூடாத கஷ்டமல்லவா? அப்படிப் பரிவாரமில்லாமற்போனாலும் பொறுத்துக்கொள்வான். தன் மக்களே நன்றியற்று உனக்கு வேலைக்காரன் ஏதுக்கென்று தடுத்ததைப் பார்க்கையில் அவன் மனம் தத்தளித்தது இவ்வளவென்று சொல்லி முடியுமோ? இப்படித் தன் இரண்டு மக்களுடைய கொடிய நடக்கையையும் பார்த்து முன்பின் யோசிக்காமல் அவர்களுக்குத் தன் இராச்சியத்தைத் தத்தஞ்செய்ததைப் பற்றி மகாராஜன் மிகவும் மனம் நொந்து புத்தி ஸ்திரமில்லாமையால் தான் சொல்வது இப்படிப்பட்டதென்று அறியாமலே ஆகட்டும், தந்தையென்று கொஞ்சமாவது பாராத இந்தப் பெரும்பாவிகளை நான் விட்டேனா! இவ்வுலகத்தாரெல்லாம் கண்டு நடுங்கி இனிமேல் இத்தன்மையான துன்மார்க்கங்களில் பிரவேசிக்காமலிருக்கும்படி இவர்களைத் தண்டித்து நான் பகை தீர்த்துக்கொள்ளுகிறேன் என்று கறுவினான்.

இப்படி மகாராஜன் தன்னால் முடியாத காரியத்திற்கு வீணாகப் பயமுறுத்திக்கொண்டிருக்கையில், இராத்திரியாய் இடிமுழக்கத்தோடும் மின்னலோடும் காற்று மழை வந்தது. அப்பொழுதும் பரிவாரத்தை உள்ளே வீடமாட்டோமென்று ஒரே பிடிவாதமாய்த் தன் மக்கள் சொன்னதினால், தன் குதிரைகளைக் கொண்டுவரச்சொல்லி இந்நன்றியற்ற மக்களோடு ஒரே வீட்டில் இருப்பதைக்காட்டிலும் அதியுக்கிர

மான இந்தக் காற்றுமழையைப் பாராமல் வெளியே போவதே நல்லதென்று நிச்சயித்தான். அம்மக்களோ, பிடித்த பிடியைச் சாதிக்கும் மனிதர்களுக்குத் தாங்கள் சம்பாதித்துக்கொள்ளுங் கெடுதிகளே நியாயமான தண்டனையென்று சொல்லிக்கொண்டே அவனை வெளியில் போகவிட்டுக் கதவை மூடிக்கொண்டார்கள்.

காற்று வேகமாய் அடித்தது. மழை வரவர அதிகப்பட்டது. அப்படியிருந்தும் மகாராஜன்: ஆ! இக்காற்று மழை நம்மக்கள் செய்த துரோகத்தைக்காட்டிலும் கொடியதா என்று சொல்லிக்கொண்டே அக்காற்று மழையில் தட்டித் தடுமாறிக்கொண்டு போகத் தலைப்பட்டான். அங்கே வெகுதூரமட்டும் ஒரு செடியும் கிடையாது. அந்தப் பெரிய மைதானத்தில் இருண்ட இராத்திரியில் உக்கிரமான காற்று மழையில் மகாராஜன் காற்றுக்கும் இடிக்கும் பயப்படாமல் திரிகையில் காற்றைப் பார்த்து: காற்றே! இப்பூமியெல்லாம் சமுத்திரமாய்விடும்படி மழையைக் கொண்டுவந்து விடு; அல்லது சமுத்திரத்தின் அலைகளை இப்பூமியின்மேல் புரண்டோடும்படி செய்து நன்றியற்ற ஜந்துவாகிய மனுஷப் பூண்டு இல்லாமல் துடைத்துவிடு என்றான். அப்பொழுது அவ்வயதுசென்ற மகாராஜனோடு அப்பஞ்சையாகிய அகசியக்காரனைத்தவிர வேறு ஒருவருமில்லை. அந்த அகசியக்காரனோ தன் எஜமானனை விடாமல் அவனுக்கு நேரிட்ட கஷ்டத்தை மறக்கடிக்க வேடிக்கையான அகசியங்களைச் செய்துகொண்டு: ஐயா! மகாராஜனே, இதென்ன கெட்டராத்திரியாயிருக்கிறது. இதை நாம் எப்படி நீந்தப்போகிறோம்? உங்கள் மகளைத் தயைசெய்யும்படி கேட்டுக்கொண்டு நீங்கள் சற்று உள்ளே போனால் நலமாயிருக்குமென்றும்,

போவதும் எவ்வழி நீயெனிலோ என் புல்லறிவுக்குள நலனுலே
மேவிய வித்துயர் அடைவதும் எந்தன் விதியாமெனவே நாடோறும்
தாவி யடிக்குங் காற்றையு மழையுஞ் சாதாரணமாகவே எண்ணி
ஆ ஊ எனவே ஓடி எதிர்ப்பே னகசியநெறியா லெங்கோனே

என்றுஞ்சொல்லி, ஆ, இது என்ன சொகுசான இராத்திரி! இந்த இராத்திரியின் குளிருக்கு எப்படிப்பட்ட சீமாட்டி

யும் கோபத்தைவிட்டுத் தயைசெய்வாள்; இதை நான் சத்தியமாய்ச் சொல்வேன் என்று வேடிக்கையாய்ச் சொன்னான். அவ்வாறு அப்பஞ்சையாகிய அகசியக்காரன் தொடர்ந்து வரும்படி திரிந்துகொண்டிருந்த மகாராஜனை காயஸ் என்று பேரிட்டுக்கொண்டு அரசனுக்குத் தெரியாமல் அவனை இடைவிடாது பின்சென்ற நம்பிக்கையுள்ள வேலைக்காரனாகிய கேன்ற் பிரபு பார்த்து: ஐயோ சுவாமி! நீங்கள் இங்கேயாயிருக்கிறீர்கள்? எப்பொழுதும் இராத்திரியிற் சஞ்சரிக்கிற ஜந்துக்கள்கூட இப்படிப்பட்ட இராத்திரியில் வெளிப்படாவே; இந்தப் பயங்கரமான காற்றுமழைக்கு அஞ்சித் துஷ்டமிருகங்களெல்லாம் ஒதுக்கிடந்தேடி ஓடிப்போயினவே. அப்படியிருக்க, இந்தத் துக்கத்தையாவது பயத்தையாவது மனிதன் சகிக்கமுடியுமா வென்றான். அதற்கு லீயர் மன்னன்: அப்பா! நீ இப்படிச் சொல்லாதே. பெருத்த நோயால் வருந்தும் மனிதனுக்கு இவ்விதமான சிறு துயரங்களால் வருத்தமுண்டாகுமா? மனது சுகமாயிருந்தால் தேகமும் சுகத்தைத் தேடும். இப்பொழுது என் மனதிலுண்டாயிருக்கும் காற்றுமழையினால் மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய பொறிகளுக்கு வேறொன்றும் தோன்றாமலிருக்கிறதென்று சொல்லி, ஐயோ! குழந்தைகளுக்குக் கைகளும் உணவும் மற்றெல்லாப் பொருளும் தாய்தந்தைகள்தாமே. அப்படியிருக்க, அவர்களிடத்தில் மக்கள் நன்றியற்றிருப்பது உணவைக் கொண்டுவந்து கொடுக்கும் கையை வாயே கடித்துக் கிழித்தாற்போல் இருக்கிறதென்று மக்களுக்குத் தாய்தந்தைகளிடத்து நன்றி யில்லாமையைப்பற்றி வெகுவாய்ப் பேசினான்.

இவன் இப்படிப் பேசுவதைக் கேளாமல் காயஸ் இந்த மைதானத்தில் நீங்கள் இருப்பது சரியல்லவென்று மிகவும் வருந்திக் கேட்டுக்கொண்டு, அங்கேயிருந்த ஒரு சிறு குடிசைக்குட் போகவேண்டுமென்று சொன்னான். இதைக் கேட்டு அக்குடிசைக்குள் அகசியக்காரன் முன்னே புகுந்து பார்த்து, ஓகோ! இதில் ஒரு பிசாசு இருக்கிறதென்று திடுக்கிட்டுப் பயந்து ஓடிவந்தான். உள்ளே போய்ப் பார்க்கையில் அது பிசாசு அல்லவென்றும், காற்றுமழைக்கு

அஞ்சி அந்த நிர்மானுஷியமான குடிசைக்குள் புகுந்திருந் தவன் ஓர் பைத்தியக்காரனென்றும், அவன் பேய்களைப் பற்றி வாய்பிதற்றிக்கொண்டிருந்ததனால் அதைக்கேட்டு அக சியக்காரன் பயந்து ஓடிவந்துவிட்டானென்றும் தெரியவந் தது. மேலும் அக்குடிசைக்குள் இருந்தவன் உண்மையான பைத்தியத்தினாலோ, அல்லது இரக்கமுள்ள நாட்டுப்புறத்து ஜனங்களிடத்தில் பணம்பறிக்கும் துராசையினாலோ பைத் தியக்காரர்களைப்போல் வேஷம் போட்டுக்கொண்டு கிராமங் கள்தோறும் போய், ஐயா! என் பேர் டாம், நான் ஏழை; என் பேர் டர்லிகுட், நான் பஞ்சை; எனக்குப் பிச்சை போடுங்களென்று சொல்லி ஊசிகளினாலும் ஆணிகளினா லும் கொம்புகளினாலும் உடம்பைக் கீறிக்கொண்டு இரத் தங்காட்டி இதுபோன்ற இன்னும் அநேகம் பயங்கரமான காரியங்களைச் செய்து ஒருவாறு கெஞ்சித் தயை பிறப் பித்துக்கொண்டும், ஒருவாறு வெறியர்களைப்போல் திட்டிப் பயமுறுத்தியும் ஒன்றுந்தெரியாத நாட்டுப்புறத்து ஜனங் களை ஏமாற்றிப் பிச்சைவாங்கிக்கொண்டு போகிறவர்க ளில் ஒருவனாயிருந்தான். அவன் தன் மானத்தை மூட அரையில் கட்டிக்கொண்டிருந்த கம்பளியைவிட வேறொன் றும் இல்லாமல் வெகு ஈனஸ்திதியிலிருந்ததை லீயர் மன் னன் பார்த்து: ஆ! இந்தப் பயல் தனக்கிருந்ததையெல்லாம் மக்களுக்கிட்டு இந்தக் கதியாய்விட்டவன். நன்றியற்ற மக் களால் அன்றி வேறொருவராலும் இப்படிப்பட்ட தாழ்ந்த ஸ்திதி நேரிடாதென்று சொன்னான்.

இப்படி மகாராஜன் பைத்தியக்காரனைப்போல் பலவாறு பேசுவதைப் பார்த்து, உத்தமனாகிய காயஸ் இவனுக்குத் தன் மக்கள் செய்த துரோகத்தினால் புத்தி சிதறிப் பைத்தியம் பிடித் ததென்று நினைத்து, அதுவரைக்கும் வெளிப்படுத்தச் சம யம் நேராமலிருந்த தன் பிரீதியைக் காட்டும்பொருட்டு அர சனுக்கு அனுகூலமான சில காரியங்களைச் செய்யத் தொ டங்கினான். அதாவது, மகாராஜனிடத்திலுள்ள பிரீதியினால் அவனைக் கைவிடாமலிருந்த சில வேலைக்காரர் உதவியால் பொழுது விடிந்தவுடனே தனக்கும் தன் இஷ்டர்களுக்கும் வாசஸ்தானமாயும் தன் அதிகாரத்துக்கு உட்பட்டதாயும்

இருந்த டோவர் என்னும் கோட்டைக்கு மகாராஜனை இட்டுக்கொண்டு போனான். அப்புறம் பிரான்ஸ் தேசத்துக்குப் போய் கோர்டீலியாவுடைய அரமனைக்கு வேகமாய்ச் சென்று அவள் தந்தையாகிய மகாராஜனிருந்த பரிதாபமான ஸ்திதியையும், அவள் சகோதரிகளின் கொடுமையையும் செவ்வையாய் விவரித்துச் சொன்னான். தந்தையிடத்தில் வெகு விசுவாசமுள்ள அக்குழந்தை அதைக் கேட்டுக் கண்ணீர்விட்டழுது, அந்நாட்டரசனாகிய தன் கணவனைப் பார்த்து: "மகாராஜனே! என் சகோதரிகளையும் அவர்கள் கணவரையும் ஜயித்து என் தந்தையை மறுபடியும் சிங்காதனத்தில் நிறுத்தும்பொருட்டு தாங்கள் தகுந்த சேனையை அனுப்பவேண்டும். என் தந்தையைப் பார்க்க எனக்கும் உத்தரவு தரவேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள். அப்படியே ஆகட்டுமென்று அரசன் சொல்லச் சேனையோடு புறப்பட்டு டோவர் கோட்டையின் சமீபத்திற் போயிறங்கினாள்.

இதற்குள் பைத்தியக்காரனென்று காவல் செய்யும்படி உத்தமனாகிய கென்ற் பிரபு ஒப்புவித்தவர்களிடத்திலிருந்து மகாராஜன் எப்படியோ ஓடிப்போய், பார்த்தவர்கள் ஐயோவென்னும்படி வைக்கோல் முட்செடி காட்டுக்கோரை முதலியவைகளை அங்குள்ள கோதுமை வயல்களில் பிடுங்கி கிரீடத்தைப்போலச் செய்து தலையிற் போட்டுக்கொண்டு உரக்கப் பாட்டுப்பாடி டோவர் கோட்டையைச் சுற்றியிருக்கும் புலங்களில் திரிவதைக் கோர்டீலியாவின் பரிஜனங்களில் சிலர் பார்த்து இட்டுக்கொண்டு வந்தார்கள். இதைக்கேட்டுக் கோர்டீலியா உடனே தந்தையைப் பார்க்கவேண்டுமென்றாள். அதற்கு அவளிடத்திலிருந்த வைத்தியர்கள் அம்மா! நாங்கள் கொடுத்த மூலிகைகள் நன்றாயுறைத்துத் தூங்கியெழுந்து பித்தம் தெளிந்து நல்ல அறிவு உண்டாகிறவரையிலும் அவரைப் பார்ப்பது சரியல்லவென்று சொல்ல, அப்படியே ஆகட்டுமென்று கோர்டீலியா ஒத்துக்கொண்டாள். மேலும் வயதுசென்ற மகாராஜனுக்குச் சொஸ்தமாகும்பக்ஷத்தில் தன்னிடத்திலுள்ள வெகு கெட்டிக்காரர்களாகிய அவ்வைத்தியர்களுக்குத் தனக்குள்ள பொருளையும் ஆபரணங்களையும் கொடுக்கிறதாகச் சொல்ல அவர் உதவியால் லீயர்

மகாராஜன் சீக்கிரத்தில் தன் மகளைப் பார்க்கத்தக்க நல்ல ஸ்திதிக்கு வந்தான்.

அப்புறம் தந்தையும் மகளும் சந்தித்தது வெகு பரிதாப மாயிருந்தது. அருமைக் குழந்தையைப் பார்த்த சந்தோஷ மும், சொற்பத் தப்புக்காக அவளை வெறுத்து மறுபடி அவளு டைய பிரியமான நடக்கையைப் பார்த்து உண்டான வெட்க மும் லீயர் மகாராஜன் மனதைக் கலக்கிவிட்டன. அன்றி யும் முன்னிருந்த பைத்தியம் இன்னும் செவ்வையாய் நீங்க வில்லை. ஆகையால் தான் இருந்த இடம் இப்படிப்பட்ட தென்றும், தன்னை அன்போடு ஆதரித்துப் பேசின கோர் டீலியா இன்னாளென்றும் அறியாமல் முதலில் சந்தேகப்பட்டு, அப்புறம் தெளிந்து உடனே சந்தோஷமும் வெட்கமும் அதி கப்பட்டதனால், மகாராஜன் மெய்மறந்து அக்கம்பக்கம் நின்ற வர்களைப் பார்த்து: இதோ என் எதிரில் நிற்கும் உத்தமி என் மகளாகிய கோர்டீலியாவோ அல்லவோ என்று எனக்குச் சந்தேகமுண்டாயிருக்கின்றது. இதற்கு நீங்கள் என்னைப் பரிகாசம் செய்யவேண்டாம் என்று சொன்னான். அப்புறம் தன் மகளைப் பார்த்து: அம்மா! நான் செய்த தப்புக்களை யெல்லாம் நீ மன்னிக்கவேண்டியதென்று முழந்தாளில் நின்று கேட்க, அவ்வுத்தமி பதிலுக்கு முழந்தாளிட்டு: ஐயா, நீங்கள் என்னை ஆசீர்வாதம் பண்ணவேண்டியதை விட்டு இப்படி எதி ரில் தாள்குனிந்து கேட்கலாமா? உங்கள் அன்புள்ள மக ளாகிய கோர்டீலியா என்னும் நானல்லவோ அப்படிச் செய்ய வேண்டியது என்று சொல்லி, தன் தந்தையைப் பார்த்து: "ஐயா! உங்களுக்கு என் சகோதரிகள் செய்த கொடுமை இவ்வளவென்று சொல்லிமுடியுமோ? அதைப்பற்றி நீங்கள் விசனப்படவேண்டாம்" என்று கண்ணைத் துடைத்தாள். பிறகு, ஐயோ! என் சகோதரிகள் சற்றும் வெட்கமின்றி வயதுசென்ற பிரியமான தந்தையின் நரைத்த தலையைக்கூடப் பார்க்காமல் காற்றுமழையில் துரத்திவிட்டார்களே; அப் படிப்பட்ட மழையில் என்னை எப்பொழுதாவது கடித்த என் பகையாளியின் நாய் வந்தாலும் அந்த இராத்திரியெல்லாம் மூட்டம் போட்டுக் குளிர்காயும்படி செய்வேனேயென்று அலங்காரமாய்ச் சொன்னாள். மறுபடியும் தன் தந்தையைப்

பார்த்து அவனுக்குச் சகாயஞ் செய்யும்பொருட்டுத் தான் பிரான்ஸ் தேசத்திலிருந்து வந்ததை விவரித்துச் சொன்னுள். அதற்கு அவன்: ''அம்மா! நான் செய்ததை மறந்து மன்னிக்க வேண்டியது. நானே கிழவன், புத்திகெட்டவன். இன்னது செய்கிறேனென்று தெரியாதவன். உனக்கு என்னிடத்தில் பிரீதி இல்லாமலிருக்க அநேக காரணங்கள் இருக்கின்றன. உன் சகோதரிகளுக்கோ அப்படியல்ல'' என்று உருக்கமாய்ச் சொன்னுன். அதற்கு கோர்டீலியா உங்களிடத்தில் பிரீதி இல்லாமலிருக்க என் சகோதரிகளுக்கும் காரணமில்லை எனக்கும் காரணமில்லை என்ருள்.

இப்படி பக்தி விசுவாசமுள்ள மகளின் ஆதரவில் இருந்து தகுந்த வைத்தியர்கள் கொடுத்த நல்ல மருந்துகளால் தூக்கம் பிடித்து மூத்தமக்களுடைய கொடுமையினுல் தாறுமாருய்ச் சிதறிப்போன புத்தி செவ்வைப்பட்டு லீயர் மகாராஜன் சுகமாயிருந்தான். வெகு கொடியவர்களாகிய அவனுடைய மூத்தமக்களுக்குப் பின்பு சம்பவித்ததைச் சுருக்கமாய்ச் சொல்லுவோம்.

தகப்பனைக் கொஞ்சமேனும் நன்றியில்லாமல் மோசஞ் செய்த அப்பாதகிகள் தங்கணவரிடத்தில்மாத்திரம் எப்படிப் பக்தியுள்ளவரா யிருப்பார்கள்? அவர்களுக்கு அடங்கி நடக்க வேண்டியதை முழுதும் விட்டுவிட்டு வெளிவெளியாய் அன்னியரிடத்தில் மனதைச் செலுத்திச் சற்றும் துரோகத்திற்கு அஞ்சாமல் கிளாஸ்தர் பிரபு ஒருவனையே இருவரும் சிநேகித்திருந்தனர். அவன் யாரெனில், சிலகாலத்திற்குமுன் இறந்துபோன பிரபுவின் வைப்பாட்டி மகன். அக்கொடும்பாவி தன் தந்தைக்கு நியாயமான பிள்ளையாயும் பாத்தியஸ்தனுயுமிருந்த எட்கார் என்னும் சகோதரனுக்குத் துரோகஞ்செய்து இராச்சியத்தைப் பிடுங்கிக்கொண்டு பல கொடுமைகளினுல் தானே பிரபுவாய்விட்டவன். கானறில், றீகன் என்னும் பாவிகளுக்குத் தகுந்த நாயகன். இப்படி இருக்கையில் றீகன் புருஷனுகிய கார்ண்வால் பிரபு இறந்துபோனதினுல் அவள் உடனே கிளாஸ்தர் பிரபுவை வெளிவெளியாய் வைத்துக்கொண்டாள். இந்தக் கிளாஸ்தர் பிரபு அவ்விரண்டு சகோ

தரிகளிடத்திலும் பிரீதியுள்ளவனைப்போல் பலதடவை அவர்களுக்கு வெவ்வேருகச் சொல்லியிருந்ததனுல் கானறில், ரீகன் செய்ததைப் பொறுக்காமல் அவளை விஷம் வைத்துக் கொன்ருள். இந்தத் துர்மார்க்கத்தை அவள் புருஷனுகிய ஆல்பனி பிரபு தெரிந்துகொண்டு கிளாஸ்தர் பிரபுவிடத்தில் அவளுக்குண்டாயிருந்த கெட்ட மோகத்தையும் கேள்விப்பட்டு அவளைச் சிறையில் அடைத்தான். கானறில் தன் மோகம் வீணுய்ப் போனதினுல் மனங்கொதித்து வெறிகொண்டு சடிதியில் தற்கொலை செய்துகொண்டாள். இப்படி இப்பாதகிகளுக்குக் கடவுள் தகுந்த சிட்சை செய்தார்.

பிரான்ஸ் தேசத்திலிருந்து வந்த வைத்தியர்களின் வல்லமையினுல் லீயர் மகாராஜனுக்குப் பைத்தியம் நீங்கி அனுகூலமானவுடனே கோர்டீலியா தன் தகப்பனுக்கு நம்பிக்கையுள்ள மந்திரியாகிய கேன்ற் பிரபுவைப் பார்த்து: ஐயா! பிரான்ஸ் தேசத்திலிருந்து நம்மோடுவந்த சைந்நியங்களுக்குத் தாங்களே சேனுபதியாய் என் சகோதரிகளின் சேனைகளை எதிர்த்துப் போர்செய்ய வேண்டியதென்ருள். அதற்கு கேன்ற் பிரபு அப்படியே ஆகட்டுமென்று சொல்லி, பிரான்ஸ் தேசத்துப் போர்வீரர் புடைசூழ்ந்துவர, கானறில், ரீகன் இவர்களின் சேனாநாயகனுகிய கிளாஸ்தர் பிரபுவின்மீது போர்க்குச் சென்ருன். சத்தியவான்கள் அற்ப பலத்தைக் கொண்டு மோசக்காரருடைய பெருஞ்சேனையையும் பராக்கிரமத்தினுல் வெல்லுகிருர்களல்லவா? அப்படியே கேன்ற் பிரபுவும் கிளாஸ்தர் பிரபுவோடு பெரும்போர் தொடுத்து அவன் படைகளைச் சிதறடித்துப் போர்க்களமெங்கும் பிணக்காடாக்கிக் கிளாஸ்தர் பிரபுவையும் கொன்ருன்.

இந்தச் சங்கதியைக் கோர்டீலியா கேட்டு வெகு சந்தோஷப்பட்டுத் தந்தையைப் பார்த்து: "மகாராஜனே! தாங்கள் மறுபடியும் மகுடஞ்சூட்டிக்கொண்டு செங்கோல் செலுத்தவேண்டும். மந்திரி பிரதானிகளோடு சிங்காசனத்தில் மறுபடியும் கொலுவீற்றிருக்கும் உங்களைப் பார்த்தாலன்றி உங்களைப்பற்றி எனக்கு இதுவரையில் உண்டாயிருக்கும் துன்பம் தீராது" என்று வெகு அன்போடு வேண்டிக்கொண்டாள். அதற்கு லீயர் மகாராஜன்: "அம்மா! எனக்கு வ

தாய்விட்டது. இனிமேல் ராஜகாரியம் பார்க்கும் புத்தியும் திறமும் உண்டாவதேது? அன்றியும் இந்த இராச்சியத்தி னல் எனக்கு ஆகவேண்டியதென்ன? உன்னிடத்திலேயே என் காலத்தைக் கழிக்கவேண்டுமென் றிருக்கிறேன்'' என்று சொல்லித் தன் மூத்தமகளாகிய கானறிலின் புருஷனுன ஆல்பனி பிரபுவை வரவழைத்து அவனைப் பார்த்து: ''அப்பா! ஆல்பனி! நீ வெகு உத்தமன், வெகு பொறுமையுள்ளவன்; அன்றியும் உன் மனைவியாகிய கானறிலின் துர்நடத்தையில் சற்றும் பிரியமில்லாதவன். அவளை நீ சிறையிலிட்டதிஞ லேயே உன் குணம் எல்லோருக்கும் தெரியவந்தது. அப்பா வியும் அவள் தங்கையாகிய றீகனும் இறந்ததனல் இனிமேல் உன்னுடைய தருமமான மார்க்கத்தைத் தடைசெய்வாரில்லை. ஆகையால் நீயே இந்த லீயர் நகரத்திற்கு அரசனுய் நீதிமுறை தவருமல் வெகுகாலம் செங்கோல் செலுத்தவேண்டியது'' என்று தன் மருமகனுகிய ஆல்பனி பிரபுவுக்குப் பட்டாபிஷே கஞ் செய்வித்து, தானும் தன் மகளாகிய கோர்டீலியாவும் மந்திரியாகிய கேன்ற் பிரபுவும் பிரான்ஸ் தேசத்திற்குச் சென்று சுகமாய் வாழ்ந்திருந்தார்கள்.




S. P. C. K. Press, Vepery, Madras—1907.